# சித்தாந்த ஞானத்திரயம்

## சஞ்சேபம்.

அகண்டவைபவ சச்சிதானந்தப் பிழம்பாகிய இறைவன் அரு விச்செய்த வேதாகமங்களில் பிரதிபாதிக்கப் பெற்ற ஞான மூன்று அவைபதிஞானம்பசுஞானம் பாசஞானமாம். பதிஇறைவன், பசு ஆன் மா, பாசம் மலம். ஆன்மாக்கள் கன்மபேதத்தால் பக்குவர் அபக்குவ ரென இருவகைப்படுவர். பக்குவர்கட்குப் பதிஞானம் சித்தியாம். அபக்குவர்கட்கு அவரவர்கள் கன்மதார தம்மிய மிருந்தவாறு பசு ஞானமும் பாசஞானமும் சித்தியாம். தேகம், பிராணன், இந்திரியம், கரணம், புத்தி, குணமுதலிய சடப்பொருள்களாகிய பாசகாரியங்களைப் பொருளெனக் கொண்டவன் பாசஞானி. இப்பாச காரிய பந்தனாய்ச் சிற்றறிவும் சிறுதொழிலு முடைய ஆன்மாவைப் பொரு ளெனக்கொண்டவன் பசுஞானி. பாசங்கட்கும் பசுக்கட்கும் வேறா கப் பொருளுண்டென்று கண்டவன் பதிஞானி, தேகமுதலிய பாச -பசுட காரியங்கள் அசேதன மாகலினாலும், இப்பாசங்களின் சம்பந்தமாய், ஆன்மாக்கள் கட்டுப்பட்டுழலும் தன்மையுடையராகலினாலும் இவற் றைப் பொருளெனக் கோடல் அஞ்ஞானமாம். பசுபாசங்களாகிய இருபகுதியும் நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், பகலோன், ஆன்மா என்னும் எட்டினு ளடங்கும். இவ்வெட்டினும் உள்ளும் புறம்பும் கலந்திருக்கும் பூரணன்பதி. இவ்வெட்டும் பதிக்குத் திருமேனியென வேதாகமங்கள் விளம்பும். சேதனனாகிய பசுவிற்கு அசேதனமாகிய தேகம் திருமேனியாதல் போலோவெனின், அற்றன்று. பசுமாயா காரியமாகிய தேகத்தைத் தானியங்கும் பிரயோசனங்கருதிக் கலந் திருப்பது. பதி பசுவையும் பாசத்தையும் கூட்டியியக்கும் பிரயோசனத்தைக் கருதிக் கலந்திருப்பது. ஆகவே பதிவியாபகமாம், பசுவும் பாசமும் தம்முள் வியாதியுற்று இவ்விரண்டும் அவ்வியாபகத்துள் வியாப் பியமாம். இப்பதி பசுபாசங்கள் மூன்றும் அநாதி நித்தியமாயுள்ள அஜன்ய பதார்த்தங்கள். அங்ஙனமாயினும் ஒன்றிலொன்று விஜாதி கங்கள். அம்மூன்றுள் பதி சத்து, பாசம் அசத்து, பசு சத்துடன் சேர்ந்தபோது சத்தாகவும், அசத்துடன் சேர்ந்தபோது அசத்தாக வும், உண்மையில் சத்துமாகாமல் அசத்துமா காமல் சதசத்தாயுள் ளது. இனிப் பதியாகிய முதல்வன் ஞானக்கிரியா சொரூபனாய், பசு வைஞானக்கிரியைகளாலும், பாசத்தைக் கிரியையாலும் இயங்கப் பண்ணுவன். அங்ஙனம் பண்ணுங்கால் சுவப்பிரயோசனம் கருதாது பரப்பிரயோசனத்தையே தமதுள்ள மிசைந்தியற்றும். ஆணவகேவ லத்தில் கிடந்த பசுக்களென்னும் எண்ணிறந்த உயிர்களையும் பதி அவரர் வினைக்கேற்ப மாயையைத் துணையாகச் சேர்த்து வெளிப்படுத்துவன். இதனால் பதி ஏகமும், பசு பலவும், பாச மூன்று மென வெளிப்படும். பசுவையும் பாசத்தையும் சேர்க்கவும், பிரிக்கவும் வல்ல பதி, தானியங்கும்போது தமதுசத்தியால் அனந்த மூர்த்திகளாவன். பாசம் அனந்த ரூபமாய்ப்பதியால் காரியபாட்டைப் பெறும். பசு பல யோனிகளில் புக்குழலாநிற்கும். பதியினுடைய அனந்த வடிவங்கள் விபூதி யென்று வேதம் பேசும். பசுவின் அனந்த வடிவங்களை வினைப்போகமென்று சுருதி செப்பும், பாசத்தினுடைய காரியப்பாடுகளைச் சிருட்டி யென்று மறைகூறும். பதி

நிர்மலமுடையராகலின், அவரினிடத்தில் சமல ரூபியாகிய பசுக்கட்கு உற்பத்தி கூறுதலடாது. பதியும் பசுவும் சித்தாயிருப்பினும் ஒன்று அறிவிக்கும் சித்து, ஒன்று அறியும் சித்துமாக விருக்கு முண்மையால், அறிவிக்கும் சித்தாகிய பதி பிடத்து அறியுஞ் சித்தாகிய பசுவினுக் குற்பத்தியுரைத்தலடாது, பாசம் கேவலம் சடமாகையால் மேற்குறித்த உபயசித்துக்களில் இதற்கிடமில்லை. அசித்தாகிய பாசத்தின் காரியமெல்லாம் சித்தாலேயாம். இடையேநின்ற பசு பாசத்தோடு சேர்ந்தவழி பந்தத்தையும், பாசத்தை நீங்கிப்பதியோடு சேர்ந்தவழி முத்தியையும் பெறும்,

மணவழகு.

சித்தாந்தம் - 1914 ஆ - ஆகஸ்ட் மீ